

# திருக்குறள்

**தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்னெஞ்சே தன்னைச் சுடும்** *(வாய்மை 293)*

நெஞ்சுக்குத் தெரிந்ததை மறைத்துப் பொய்கூறல் ஆகாது. அப்படிப் பச்சைப்பொய் உரைத்தால் தன் நெஞ்சமே நெருப்பாகி வருத்தம் தரும்..

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### எதற்கும் அஞ்சாதவர்!

பாரத சுதந்திரப்போராட்ட வீரர்களுள் இன்னும் தமிழ்நாட்டுத் தொண்டர்கள் பலரைப்பற்றி நாம் அறியாமல் இருக்கிறோம். இம்மாதம் நமது மடல் உப்புச்சத்தியாக்கிரக வீரரான தீர்த்தகிரி முதலியாரைப்பற்றிய தகவல்களைச் சேகரித்து வழங்குவதில் பெருமை கொள்கிறது. அறியப்படாத சுதந்திரப்போராட்ட வீரர்கள் – தொகுதி நூலில் தியாகி தீர்த்தகிரியாரைப் பற்றி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

'எதற்கும் அஞ்சாதவன்' – என்று புகழப்பட்டவர் தீர்த்தகிரியார். சுதந்திரபோராட்ட வீரர்களாகிய சோமயாஜுலு, வேலூர் குப்புசாமி முதலியார் ஆகியோருடன் இணைந்து பாரதியின் பாடல்களைப்பாடி விடுதலை உத்வேகத்தை மக்களிடையே பரப்பியவர். அலிபுரம் ஜெயிலில் அடைக்கப்பட்டபோது பெருந்தலைவர் காமராசரும் உடன் சிறைவைக்கப்பட்டிருந்ததாக அறிகிறோம்.

தியாகி தீர்த்தகிரியார் நாட்டுமருந்து தயாரித்து நோயாளிகளுக்கு வழங்குவார். சிறைச்சாலைக் கைதிகளுக்கு மட்டுமின்றி ஜெயிலர் உள்பட காவலர்களுக்கும் வயிற்றுப்போக்கு போன்ற நோய்களுக்கு மூலிகை மருந்துகள் தயார்செய்து குணப்படுத்தியிருக்கிறார். அந்த மருத்துவ சேவையை விடுதலையாகி வெளியே வந்தபிறகும் தொடர்ந்தார். தீர்த்தகிரியாரின் பல்பொடி பிரசித்தம். விடுதலை வீரர் பெயரால் சித்தரஞ்சன் பொடி, சித்ரஞ்சன் பாம் என வலிநிவாரணிகளைத் தயாரித்து ஏழை மக்களுக்குப் பயன்தர சேவை செய்துள்ளார்.

1947-இல் சித்த வைத்திய சங்கத்தை நிறுவியுள்ளார். கைத்தறி நெசவாளர்களின் முன்னேற்றத்திற்காக தர்மபுரி, சேலம் பகுதிகளில் சங்கம் அமைத்துப் பணி புரிந்ததை அப்பகுதி மக்கள் இன்றளவும் போற்றுகின்றனர்.

தீர்த்தகிரியார் ஏறத்தாழ 8½ ஆண்டுகள் அந்நியராட்சியில் சிறைவாசம் அனுபவித்துள்ளார். அதன் பலனாக தேசவிடுதலையையும் கண்டு பெருமிதம் கொண்டார்.

இந்திய சுதந்திரப் போராட்டக் காலத்தில், குறிப்பாக 'வெள்ளையனே வெளியேறு' எனும் ஆகஸ்ட் புரட்சியின் போது தர்மபுரிப் பகுதிகளில் ஆங்கில ஏகாதிபத்திய சர்க்காருக்கு சிம்ம சொப்பனமாக விளங்கியவர் தீர்த்தகிரி முதலியார்.



இவர் அன்னசாகரம் எனும் ஊரில் ஒரு சாதாரண நெசவாளர் குடும்பத்தில் பிறந்தார். தேசபக்தி காரணமாக காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து பணியாற்றத் தொடங்கினார். அப்போது இவருக்கு தியாகச்சுடர் சுப்பிரமணிய சிவா, வ.வெ.சு.ஐயர், மகாகவி பாரதி, ஸ்ரீஅரவிந்தர், வ.உ.சிதம்பரம் பிள்ளை, நீலகண்ட பிரம்மச்சாரி, திரு வி.க. ஆகிய தலைவர்களுடன் நல்ல தொடர்பு ஏற்பட்டது. நல்ல ஆஜானுபாகுவான தோற்றம் கொண்ட இவர் தேசப்பணி என்றால் ஆவேசம் கொண்டு செயலாற்றுவார். இவரை சுப்பிரமணிய சிவா "எம்டன்" என்று அழைப்பாராம்.

## அன்னையின் பிரார்த்தனை



*அவற்றின் மூல இருளினின்றும் அவற்றின் ஆதிகாலக் குழப்பத்திலிருந்தும் விழித்து, உணர்வையும் ஞானத்தின் முழு ஒளியையும் பெறுவதற்காக இவ்வுலகின் கணக்கிலடங்காத கூறுகளையெல்லாம் இயங்க வைக்கவும் கிளறவும் கடையவும் செய்கிறாய், இக்கூறுகளையெல்லாம் இந்த விதமாகக் கடைவதற்குப் பேரன்பைப் பயன்படுத்துகிறாய், வற்றடிக்க முடியாத பெருக்கமுடைய இவ்வன்பு வெள்ளம் ஆழங்காண முடியாத எல்லையற்ற நினது இதயத்திலிருந்து பொங்கிவருகிறது. நின் இதயமே நான் குடியிருக்கும் இடம், நின் இதயமே என் ஜீவனின் உண்மை, நின் இதயத்தில் நான் ஒண்டிக்கொண்டேன், நின் இதயமாகவே நான் ஆகிவிட்டேன். சாந்தி, எல்லா உயிர்களும் சாந்தி பெறுக.*

**ஸ்ரீஅன்னை**

தியாகி தீர்த்தகிரி முதலியார் ஒரு நெசவாளர், கவிஞர், சித்தவைத்தியர், சமூக சேவகர், மக்கள் தலைவர் எனும் பன்முகத் தன்மைகொண்ட அற்புதத் தமிழர். பாரதத்தாயின் அபூர்வமான இலட்சியப்புதல்வர்களுள் ஒருவர். மேலும் அவரைப்பற்றித் தெரிந்துகொள்வோம். போற்றி வணங்குவோம். இப்படியே வளரும் சந்ததியினருக்கும் எடுத்துச் செல்லுவோம்.

வெயில் காலம் நிறைய நல்ல தண்ணீர் குடிப்போம் நலமாயிருப்போம். இந்திய விடுதலை 75 கொண்டாட்டத்தில் நாம் நிறைய கற்றுக்கொள்வோம்.

.வணக்கங்களுடன்

இரா.மீனாட்சி.



## நமது நூலகம்

**விநாயக் (சாகித்ய அகாதமி விருது பெற்ற இந்தி நாவல்) இந்தி மூலம் – ரமேஷ் சந்திர ஷாஹ் | தமிழாக்கம் – என். காமாட்சி தரணி சங்கர் | சாகித்திய அகாதெமி | 2022 | ₹395.00**



இந்நூலை தமிழாக்கம் செய்துள்ளவர் புதுவை ஜிப்மர் மருத்துவமனை நிர்வாகத்துறையில் பணியாற்றும் நம்முடைய பக்கத்து ஊர்க்காரர் சகோதரி காமாட்சி. இனிய சுபாவத்தினர். வானொலி நாடகங்கள் பலவற்றை எழுதியுள்ளதோடு இந்தியிலிருந்து மொழிபெயர்த்தும் அளித்துவரும் மொழிச்சேவையைக் கடந்து 25 ஆண்டுகளுக்கும் மேலாகச் செய்து வருகிறார். “விநாயக்“ இந்தி நாவலினை எழுதிய மூல ஆசிரியர் ரமேஷ் சந்திர ஷாஹ் அடிப்படையில் ஓர் ஆங்கிலப் பேராசிரியர் ஆனால் தமது அனைத்துப் படைப்புகளையும் இந்தியிலேயே அர்ப்பணிப்புடன் எழுதிவருகிறார். 2004 ஆம் ஆண்டு இவருக்கு இந்திய அரசு பத்மஸ்ரீ விருது வழங்கி கௌரவித்துள்ளது. விநாயக் நாவல், மனப்புரிதல் இல்லாத நெருங்கிய உறவுகளின் வலிகள், வேதனைகள் என மாயைகளில் சிக்கும் மாந்தர்களின் வாழ்வினைச் சொல்கிறது. சிக்கலான பாத்திரப்படைப்புகள். மொழிபெயர்ப்பாளர் காமாட்சி இயன்றவரையில் தமிழ்மொழி வளத்திற்குள் நாவலைக்கொண்டுவர முயன்றிருக்கிறார். பாராட்டுகள். மேலும் தமிழிலிருந்தும் இந்திக்கும் மொழிவளம் சேர்க்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.!

**திருத்தலங்களைத் தேடி | திருமதி வனஜா இளங்கோவன், திருமதி மைதிலி வைத்தியநாதன் பத்மா பதிப்பகம், சென்னை | 2021 | ₹320.00**

தமிழகச் சகோதரிகள் இருவர் தமது திருத்தலப் பயண அனுபவங்களைப் பக்திபூர்வமாக எளிய தமிழ்நடையில் பயனுற தொகுத்து வழங்கியிருக்கிறார்கள். அவர்களுடைய தேடலில் நாமும் இணைந்துகொள்கிறோம். நம் ஊரிலா, நம்மண்ணிலா, இந்த பாரதத்திலா, பக்கத்து நாட்டிலா, இப்படியெல்லாம் கோவில் பண்பாடு நிரம்பித் ததும்புகிறது என்று தெரிந்து கொண்டு மலர்ச்சியுறுகிறோம்.

கோவில், தீர்த்தம், சிற்பக்கலை, மூர்த்தம், தலபுராணம், பண்டைய வரலாறு என்பதோடு இன்றையபெயர், அங்குள்ள மக்கள் சொல்லும் வழமைகள் என, சுருதி ஏறிக்கொண்டே செல்லும்போது அகழ்வாராய்ச்சிகள், ஒன்றுக்கொன்று தொடர்பான வியப்பளிக்கும் செய்திகள், இலக்கியப்பக்கங்கள் என்று நம்மை ஈர்க்கின்றன. வருணனைகள் உயர்வாக இருக்கின்றன. அனுபவக்கனிச்சாறு இந்நூல்.!

களப்பணி ஆய்வாளர்களாகவும் வரலாற்று வாசிப்புடையவர்களாகவும், இந்துமதப் பின்னணியில் கதைசொல்லிகளாகவும் விளங்கும் இவ்விருவரும் சேகரித்துத் தரும் விஷயங்கள் நம்முடைய பாரம்பரியச் செல்வங்களை அக்கறையுடன் அடுத்த தலைமுறையினரும் பேணிப்பாதுகாத்துப் பெருமை கொள்ளவேண்டும் எனும் ஆதங்கத்தையும் சேர்த்தே வழங்கியுள்ளன. நல்லமுயற்சி, காலத்திற்குத் தேவையான படைப்பு. தரமான அச்சு! வளமான நூல். படித்துப் பயனுறுங்கள் வாசகர்களே! உங்கள் வாசிப்பினை ஊக்கப்படுத்த.. திருத்தலங்களைத் தேடி நூலிலிருந்து சில பகுதிகள்…….

108 திவ்விய தேசங்களில் ஒன்று பொய்கை ஆழ்வார் அவதரித்த திருவெஃக்கா எனும் திருத்தலம். பிரம்மனின் யாகத்தை அழிக்க சரஸ்வதி, வேகவதி ஆறாகப் பெருக்கெடுத்து ஓடிவர, அவளை, பெருமாள் அணையெனக் குறுக்கே சயனித்து தடுத்த தலம். காஞ்சி வந்த திருமழிசை ஆழ்வார் பல ஆண்டுகள் இத்தலத்தில் பெருமாளுக்கு சேவை சாதித்தார். இவரின் சீடர் கணிகண்ணன், பெருமாள்மீது மிகவும் பக்தி பூண்டு, நிறைய பாடல்கள் புனைபவர். இவரைப்பற்றி கேள்விப்பட்ட மன்னன் தன்மீது ஒரு பாடல் புனையுமாறு கேட்க, கணிகண்ணனோ பெருமாளைத் தவிர வேறு எத்தெய்வத்தையுமே பாடாத தான் மானிடரைப் பாட முடியாதென மறுக்க, மன்னன் அவரை நாடு கடத்தினான். இதனால் சீடருடன் திருமழிசை ஆழ்வாரும் கிளம்ப, பெருமாளிடம்

**கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி**
**மணிவண்ணா நீ கிடக்க வேண்டி – துணிவுடைய**
**செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்**
**மைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்.**

என்று பாட பெருமாளும் கிளம்பி விடுகிறார். இதைக் கேள்வியுற்ற மன்னன் ஓடோடி வந்து மன்னிப்புக் கேட்டு, காஞ்சிக்கே திரும்ப வேண்டுகிறான்.

**கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி**
**மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் – துணிவுடைய**
**செந்நாப் புலவனும் போக்கிழிந்தான் நீயுமுன்றன்**
**பைந்நாகப் பாய் விரித்துக் கொள்**

என்று பாட, பெருமாள் மீண்டும் காஞ்சிக்கு வந்து

திரும்ப சயனித்த போது, வலமிருந்து இடமாக சயனித்து விட்டார். இப்பெருமாளுக்கு ஆழ்வார் கூறியதுபோல் செய்தமையால், சொன்ன வண்ணம் செய்த பெருமாளென பெயர். தை மாத மக நட்சத்திரத்தில் இந்நிகழ்வு உற்சவமாகக் கொண்டாடப்படுகிறது. தாயார் கோமளவல்லி நாச்சியார். தீர்த்தம் பொய்கை புஷ்கரணி, விமானம் வேதாசார விமானம். மங்களாசாசனம் செய்தவர்கள் திருமழிசை ஆழ்வார். திருமங்கை ஆழ்வார், பொய்கை ஆழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் ஆவார்.

படித்ததில் பிடித்தது

## பூவுலகைக் காப்பாற்றியாகணுமே குப்பைகளை வகைப்படுத்துதல்

பயன்பாட்டுக்குப் பின், விட்டெறியும், விரும்பாத, விலை மதிப்பற்ற பொருளே குப்பை எனப்படுகிறது. இதை–

- திரவக்கழிவு
- திடக்கழிவு
- உரக்கழிவு
- ஆபத்தான கழிவு
- மருத்துவக் கழிவு
- மறுசுழற்சிக் கழிவு
- பழைய கட்டடக் கழிவு
- பசுமைக் கழிவு

என வகைப்படுத்தலாம். இதில் பசுமைக் கழிவைச் செடிகளுக்கு இயற்கை உரமாகப் பயன்படுத்தலாம்.

ஒரு நாளைக்கு, ஒரு மனிதன், முக்கால் கிலோ குப்பையை வெளியே வீசுகிறான். உலகிலேயே அதிகமாகக் குப்பையை உருவாக்குவது, வடஅமெரிக்க நாடான கனடா. சேரும் குப்பையைச் சிறப்பாக நிர்வகிப்பது ஐரோப்பிய நாடான ஜெர்மனி, சேரும் குப்பையில் 56.1 சதவீதத்தை மறு சுழற்சி செய்கிறது.

ஐரோப்பிய நாடான ஸ்வீடன், பூஜ்யம் குப்பை நிர்வாகக் கொள்கையை சிறப்பாகக் கடைபிடிக்கிறது. பழைய துணியிலிருந்து லூப் என்ற முறையில் புதுத்துணி தயாரிக்கிறது இந்த நாடு. 46 சதவீத வீட்டு உபயோகக் குப்பையையும், 64 சதவீதம் பாட்டில், டப்பா போன்ற குப்பையையும் மறுசுழற்சி செய்கிறது. ஸ்வீடன் உணவுக் குப்பையிலிருந்து “பயோகேஸ்” எரிபொருள் தயாரிக்கின்றது. பல வண்ணங்களில் தனித்தனி குப்பைத் தொட்டிகள் வைத்து, குப்பையை முறையாக ரகம் பிரித்து சேகரிக்கின்றனர்.

– அதன் விவரம்

- பச்சைத்தொட்டி – அழுகும் குப்பை
- நீலம் – அழுகாத குப்பை
- மஞ்சள் – பேப்பர், கண்ணாடி பாட்டில்கள்
- சிவப்பு – மறுசுழற்சி செய்ய முடியாத குப்பை
- வெள்ளை – மென்மையான பிளாஸ்டிக்

இங்கு குறிப்பிட்டுள்ள நிற அடிப்படையில், வீடுகளில் உருவாகும் குப்பையைப் பிரித்து வழங்க வேண்டும். பிளாஸ்டிக்கில் தயாரிக்கப்படும் சாமான் பை மட்க 20 ஆண்டுகள் வரை எடுக்கும் என்கின்றனர். பிளாஸ்டிக் பாட்டில்கள் மட்க 450 ஆண்டுகள் வரை ஆகுமாம்.

குப்பையை முழுமையாக அப்புறப்படுத்த சிலவற்றைக் கவனத்தில் கொண்டு செயல்படவேண்டும் அவை….

- தேவையற்ற பொருட்களை வாங்காதிருத்தல்
- பொருள் உபயோகத்தைக் குறைத்தல்
- மறுசுழற்சி செய்யும் பொருட்களை உபயோகித்தல்

போன்றவையாகும். இதுபோல ஒவ்வொரு குடும்பமும் சபதம் ஏற்றால் குப்பை குவிவது குறையும். பூமி காப்பாற்றப்படும்.

தகவல் – தினமலர் சிறுவர்மலர். ஏப்ரல் 30 2022

வாசகர் குரல்

ஆரோவில் செய்திமடல் ஏப்ரல் 2022 கிடைத்தது. எண் 108 ஒரு மந்திர அளவு! அடேயப்பா 108ஐப்பற்றி எத்தனை அரிய தகவல்கள். பிரமித்துப்போனேன். இந்திய தொலைநோக்கு மெய்அறிவின் வெளிப்பாடு 108 என்பதை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியுள்ளீர்கள் வாழ்த்துகள். குழந்தைப்பாடல் – ஆடிவரும் ஆனை பாரு ஆலமர காலு – ஆனைவரும் அழகு அருமை அறிவோம் நம் தமிழ் அருமையான தொடக்கம்.

கவிஞர் மா. கமலவேலன் – திண்டுக்கல்.
சாகித்ய அகாதெமி விருதாளர்.

இனிய வணக்கம். ஏப்ரல் - 2022 ஆரோவில் செய்திமடல் கிடைக்கப்பெற்றேன். மிக அற்புதமான செய்திகளை எட்டுப் பக்கங்களில் வடிவமைத்திருக்கிறீர்கள். மரங்களும் அதன் பயன்களும் சிறப்பாக இருந்தது. அன்னையின் பிரார்த்தனை இதன் அனைத்துப் பகுதிகளும் மிகவும் பயனுள்ளதாக இருந்தது.

மா. பழனி, தலைமை ஆசிரியர்
சின்னப்பள்ளத்தூர், தருமபுரி,

**அனைவருக்கும் இனிய தொழிலாளர் தின நல்வாழ்த்துகள்**



# நமது ஊர்களில் பயன்தரும் மரம் வளர்ப்போம்

## வளர்க்க வேண்டிய நல் மரங்கள்.

| மரங்களின் பெயர் | அதன் பயன்கள் |
|---|---|
| மரமல்லி மரம் | பச்சைப் பட்டையை நன்றாக இடித்து தண்ணீரில் போட்டு கொதிக்க வைத்து ஆறியதும் குளித்துவர வியர்வை நாற்றமும் அசதியும் தீரும். |
| வாகை மரம் | மரப்பட்டையை பச்சையாக எடுத்து பஞ்சுபோல இடித்து நிழலில் உலர்த்தவும். பின்பு மாப்போல இடித்துக்கொள்ளவும் இந்தத்தூளை 100 கிராம் மிளகுத்தூள் 25கிராம் சுக்குத் தூள் 10 கிராம் சேர்த்து காலையில் சாப்பிடுவதற்கு முன்னர் ஒரு தேக்கரண்டி உட்கொண்டு சிறிது வெந்நீர் குடிக்கவும் தொடர்ந்து 8 நாட்களுக்கு இதுபோல மருந்து உட்கொண்டு வந்தால் உணவு ஜீரணமாவதுடன் பசியும் ஏற்படும். இலையை மைபோல அரைத்து கண்நோய்களுக்குக் கட்டலாம். தொடர்ந்து 3 நாட்கள் இதுபோல் கட்டிவந்தால் கண்நோய்கள் குணமாகும். |
| வாதநாராயணமரம் | இலையை சிற்றாமணக்கு எண்ணெயில் வதக்கி வீக்கம் கட்டிகள் ஆகியவற்றிற்கு ஒத்தடம் கொடுத்தால் அவை குணமாகும். இலையைச் சாறுபிழிந்து அதனுடன் ¼ பங்கு நெய் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும் 100 மிலி சாறுக்கு 25மிலி நெய் வீதம் சேர்த்து இதில் 50 மிலி அருந்த நன்கு மலம் கழியும் (மலம் கூடுதலாகக் கழிந்தால் தயிர் அருந்தலாம்) |
| வாழை மரம் (பலவகை வாழை மரங்கள் ஒவ்வொன்றிற்கும் சிறப்புக் குணங்கள் உள்ளன.) | அதிகம் முற்றாத மொந்தன் வாழையிலையில் உணவு உட்கொள்ள பித்தம் தணியும். உணவு எளிதில் ஜீரணமாகும். இந்த இலை உணவில் லேசான துவர்ப்பு சுவையையும் உண்டாகக் காணலாம்.<br>உடல் எடையை அதிகரிக்க உதவும். வலு சேர்க்கும். இரத்தம் அதிகரிக்கச் செய்யும். மாதவிலக்கை ஒழுங்காக்கும். மலைச்சிக்கலை நீக்கும். மூலநோய், தோல் நோய்கள் குணப்படுத்தும். மூளைபலம் பெறும் நினைவாற்றல் பெருகும். வறட்சியைப் போக்கும். குடல் புண்ணை ஆற்றும். ஜீரணம் தொடர்பான சிறுநோய்கள் குணமாகும். |
| வில்வமரம் | 10கிராம் கொழுந்து இலையை அரைத்து வெறும் வயிற்றில் தொடர்ந்து 15 நாட்களுக்கு உட்கொண்டுவர வெட்டைநோய் தணியும். (மருந்து உண்ணும் நாட்களில் மிளகுப்பொங்கலும், தயிர்சோறும் மட்டுமே சாப்பிடவும்) |
| வேங்கை மரம் | .முற்றாத இலையை அரைத்து, சிறிது மஞ்சள் நீரை ஊற்றிப் பிசைந்து களிபோலக் கிண்டி, கட்டி மற்றும் புண்களின் மேல் வைத்துக்கட்டினால் குணமாகும். |
| வேப்பமரம் | 5கிராம் வேப்பங்கொழுந்தைத் தொடர்ந்து காலையில் வெறும் வயிற்றில் உண்டுவர நீரிழிவு நீங்கும். வேப்பங்கொழுந்து 2கிராம், கறிவேப்பிலை 1 கிராம் இரண்டையும் சேர்த்து தினமும் காலையில் உட்கொண்டு வர நீரிழிவு நோய் குணமாகும்.<br>வேப்ப எண்ணெய்சோப் குளியலுக்கு ஏற்றது, தேமல், சிறுநோய்கள், வியர்வை நாற்றம் ஆகியவை அகலும். தொற்று நோய்களும் ஏற்படாது. |

தகவல்:- **டாக்டர். C.R.L. நரசிம்மன்,** வேளாண்துறை வல்லுநர், கோவை.

**மரம் மேலும் வளரும்**



கட்டுரை

# வரலாறு

## புதுச்சேரி அகில இந்திய வானொலி நிலையம்

அகில இந்திய வானொலி பற்றி எழுதும்பொழுது அவர்களுடைய தொடக்க நாள் நிகழ்ச்சியைப் பற்றி எழுதாமலிருக்க முடியாது, அகில இந்திய வானொலி நிலையம், பாண்டிச்சேரி 1967 செப்டம்பர் 23ஆம்தேதி மாலை 6.30 மணிக்குத் தொடங்கப்பட்டது. பாண்டிச்சேரி கவர்னர், அகில இந்திய வானொலியின் முதல் இயக்குநர், வேறு சில பிரமுகர்கள் முன்னிலையில் நிகழ்ச்சி தொடங்கியது. இந்தத் தொடக்கவிழா கவர்னர் மாளிகையில் ஓர் விசாலமான அறையில் நடந்தது. இதுபோன்ற ஒரு நிகழ்ச்சிக்கு நாங்கள் அழைக்கப்பட்டது இதுதான் முதல்தடவை. ஆகவே அது மறக்க முடியாத ஓர் அனுபவமாக இருந்தது. நிகழ்ச்சி, பதிவுசெய்யப்பட்ட அன்னையின் ஆர்மோனிய இசையுடன் தொடங்கியது. அந்த இசை வேறு ஏதோ ஒரு உலகிற்குப் போனது போன்ற உணர்ச்சியைக் கொடுத்தது. பிறகு இந்த விசேஷ தருணத்திற்காக அன்னை அருளிய பதிவு செய்யப்பட்ட செய்தி ஒலிக்கப்பட்டது.

'O India, land of light and spiritual knowledge! Wake-up to your true mission in the world, show the way to Union and Harmony'.

இதற்குப்பிறகு நாங்கள் ஆறு பேர் வேத மந்திரங்கள் ஓதினோம். ஸ்ரீஅன்னை சொல்லியபடி இசையமைக்கப்பட்ட மூன்று ரிக் வேத மந்திரங்கள். இதன்பிறகு ஒரு புகழ்பெற்ற கர்நாடக சங்கீத வித்வான் தியாகராஜ சுவாமிகள் அருளிய ஒரு பாடலைப் பாடினார். அகில இந்திய வானொலியின் முதல் இயக்குநர் திரு. தர்மஞானியின் ஆங்கில உரையுடன் நிழ்ச்சி இனிதே நிறைவடைந்தது. முழு நிகழ்ச்சியும் அகில இந்திய வானொலியினால் பதிவு செய்யப்பட்டு பாண்டிச்சேரி நிலையத்திலிருந்து ஒலிபரப்பானது.




திரு. தர்மஞானியின் பேச்சு எனக்கு நினைவிருக்கிறது அதில் ஒரு பகுதி என் உள்ளத்தைத் தொட்டது; ஆசிரமம் ஆன்மிக ஞானத்தின், கல்வியின் ஊற்று, அதனால் அகில இந்திய வானொலி எப்பொழுதுமே ஆசிரமத்தின் உதவியை நாடும். ஸ்ரீஅன்னையின் ஆசீர்வாதத்தைப் பெற எப்பொழுதும் முயலும் என்று அவர் பேசியிருந்தார். இந்தத் திறப்பு விழாவிற்குப் பிறகு நான் அன்னையைக் காணச் சென்றபோது அகில இந்திய வானொலியின் இயக்குநரின் இந்தப் பேச்சைப் பற்றிச் சொன்னேன். அப்பொழுதுதான் அவர் என்னிடம் "எப்பொழுது JIPMER அல்லது அகில இந்திய வானொலி ஏதாவது உதவி கேட்டாலும் ஒத்துழைக்கவேண்டும்" என்று சொன்னார்.

பாண்டிச்சேரி அகில இந்திய வானொலி, தொடக்கத்தில் பழைய Light House பக்கத்தில், இப்பொழுது Promenade ஹோட்டல் இருக்கிறதே அங்கு இருந்தது. அதைச்சுற்றிலும் வெண்ணிற இரும்பு வேலி இருந்தது. வாசலுக்கு மேலே AIR Pondicherry என்று எழுதியிருந்தது. வாசலையொட்டி வரவேற்புப் பகுதி இருந்தது. பிறகு பதிவு செய்யும் பகுதி, முதல் நுழைவு வாயிலில் ஸ்ரீஅன்னையின் செய்தி பொறிக்கப்பட்டிருந்தது. நான் AIR க்கு போகும்போதெல்லாம் என்னுடைய கண்கள் ஸ்ரீஅன்னையின் வார்த்தைகளை நோக்கிச் செல்லும். இப்பொழுது வானொலி நிலையம் JIPMER அருகில், இந்திரா நகரில் இருக்கிறது. அங்கு இந்தச் செய்தியைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்களா என்பது எனக்குத் தெரியாது.

அகில இந்திய வானொலி நிலையத்தார், ஆசிரமத்திடமிருந்து இரண்டு வகையான நிகழ்ச்சிகளை விரும்பினார்கள். முதலாவது பல்வேறு தலைப்புகளைப் பற்றிய பேச்சுகள். இந்த விஷயமாக அவர்கள் பள்ளிக்கூடத்திற்குக் கடிதம் அனுப்புவார்கள். ஒரு மாணவன் அல்லது மாணவி அதற்கு ஆயத்தமாக இருக்கும்போது Registrar மாணவனை/மாணவியை நியமனம் செய்வார். பேச்சு ஸ்ரீஅன்னையின் ஸ்ரீஅரவிந்தரின் வாழ்க்கை பற்றியும் அவர்களுடைய யோகம் பற்றியும் இருந்தால் சம்பந்தப்பட்ட சாதகரிடம் அகில இந்திய வானொலி நேரடியாகத் தொடர்பு கொள்ளும். நளினிகாந்த குப்தா, மாதவ் பண்டிட், அரவிந்த பாசு, நீரத்பரன், மனோஜ்தாஸ், கிரீத் ஜோஷி, வேறுசிலரும் இருப்பார்கள். வானொலி எங்களிடம் கேட்ட இரண்டாவது வகையான நிகழ்ச்சி இசையை அடிப்படையாகக் கொண்டது. இதற்கு எனக்குக் கடிதம் வரும். ஒலிபரப்பின் பொருள், தேதி, நேரம், நிகழ்ச்சி வெளியாகும் நேரம், பதிவுசெய்யும் தேதி, நேரம், இந்த வேலைக்குக் கொடுக்கப்படும் சன்மானம் இவையெல்லாம் அதில் விவரமாகக் கூறப்பட்டிருக்கும். பதிவு செய்வதற்குமுன் நான் எப்பொழுதும் அன்னையின் அனுமதியைப் பெறுவேன். மாணவர்களுடனோ அல்லது ஆசிரமக் கலைஞர்களுடனோ வேலை செய்தேன்.

உதாரணத்திற்கு ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் கூறுகிறேன்.

பொருள் : ரவீந்திர சங்கீத்-குரல்கள், மனோஜ்தாஸ் குப்தா, அரூப் மித்ரா, பக்க வாத்தியங்கள், சிதார்-ரோமன் பாலித், சரோட் - தேவி பிரசாத், துப்லு - புல்லாங்குழல், தபேலா - ரமேஷ் ராவல், ஒலிபரப்பு தேதியும் நேரமும் 8.5.1970 இரவு 8 மணி, சன்மானம் 40 ரூபாய்.

ஸ்ரீஅன்னை இருந்த காலத்தில் அகில இந்திய வானொலியில் இந்த நிகழ்ச்சியை நடத்துவதன் மூலம் பெறப்படும் பணத்தையெல்லாம் நான் அன்னையிடம் கொடுத்துவிடுவேன். அவர் எங்கள் அர்ப்பணிப்பை ஏற்றுக்கொண்டு "ஆசீர்வாதம்" என்று எழுதுவார்.

தகவல் – வைகறை – ஏப்ரல் 2022
வெளியீடு. புதுவை ஆசிரமம்.

செய்தித்துளிர்

நமது மையத்தின் சார்பில் தமிழ்ச் சித்திரை புத்தாண்டுப்பிறப்பை முன்னிட்டு ஆரோவில்



யுனிட்டி பெவிலியனில் தமிழ்மாமணி டாக்டர் அரிமளம் பத்மநாபன் அவர்களின் இன்னிசை விருந்து சிறப்பாக நடைபெற்றது. இதில் நமது நட்புவட்டத்தினர், ஆரோவில் குடும்பத்தினர் விருந்தினர் கலந்து கொண்டார்கள். மோகனம் கலாச்சார மையம் சார்பில் சிற்றுண்டி வழங்கினார்கள். செல்வி பிரியங்கா வரவேற்புரையும் செல்வி ஆரோபிரேமியின் நன்றியுரையும் பொருத்தமாக அமைந்திருந்தன.

நமது அமைதிக்குரல் வட்டத்தினர் திண்டிவனம் சாரம் கிராமத்தில் அருட்கோட்ட மையத்தில் நடைபெற்ற அருட்பெருஞ்சோதி ஆண்டு விழாவில் (30 ஏப்ரல் 2022) கலந்துகொண்டனர். இதில் யாத்ரா கலைக்குழுவினரும், இளைஞர்கள் கல்வி மையம் மாணவியரும் அருட்பா பாடல்களுக்கு இரு நடன நிகழ்ச்சிகளை வழங்கினார்கள். சாரம் அடிகளார் உலக அமைதிப் பிரார்த்தனை நடத்தினார்.



சிறப்பு நிகழ்ச்சிகளை அக்கா தொகுத்தளித்தார். ஆசிரியர் திரு. ஆனந்து, ஆரோவில் தோழர் வெங்கடேஷ் அனுபவ உரையாற்றினர். கிராமப் பெரியவர்களுடன் நல்ல கலந்துரையாடல் நடந்தது. விழாவில் ஆறுவயதுச் சிறுமி-சாரம் துரைசாமி அடிகளாரின் பேத்தி ரா. இந்துஜா பரதநாட்டியம் ஆடி சூழ்நிலையை இனிமையாக்கினார். அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்கவே!



இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்க!
என்னும் குரலை எழுப்பிடுவோமே!
கல்லார் கற்றார்; காணார் கண்டார்;
இல்லார் உள்ளார்; ஈந்தார் ஏற்றார்;
நல்லார் அல்லார்; நம்பர் பண்பர்;
செல்வர் எளியர்; சிறியார் பெரியார்;
எவர் எவரேனும் எத்திசையேனும்
மானிட ஓரின மக்களே யாவர்
ஓர்வான் சூழும் ஒருலகத்தில்
ஒருயிர்த் துடிப்புடன் ஓரான்மநேயர்
சாதிமத மெனும் பேதமேயின்றித்
தீதற வாழும் செவ்விய மந்திரம்
இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்கவே!

– கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார் (மே 5 பிறந்த தினம்)

## தமிழ்ப் பழமொழிகள்

### பி

1. பிச்சை இட்டுக் கெட்டவர்களும் இல்லை; பிள்ளை பெற்றுக் கெட்டவர்களும் இல்லை.
2. பிடித்த கொம்பும் விட்டேன்; மிதித்த கொம்பும் விட்டேன்.
3. பிண்டத்துக்கு இருக்காது; தண்டத்துக்கு இருக்கும்.
4. பிள்ளையாரைப் பிடித்த சனி; அரச மரத்தையும் பிடித்ததை போல.
5. பிள்ளையையும் கிள்ளிவிட்டு, தொட்டிலையும் ஆட்டுவதா?

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

## ஸ்ரீஅரவிந்தரின் சிந்தனை மணிகள்



வலிமை, கோபத்துக்கு அப்பாற்பட்டதாக இருக்கும்போது அது மாண்புமிக்கதாகும். அழிப்பதில் சிறப்பு இருக்கலாம். ஆனால் அது பழிவாங்கும் நோக்குடன் செய்யப்படும்போது தாழ்வுறுகின்றது. இவற்றை விட்டொழி, ஏனெனில் இவை மனிதனின் கீழியல்பைச் சார்ந்தவையாகும்.

சிறுவர் இலக்கியம்

## எங்கள் வீட்டு மருத்துவர்

எங்கள் வீட்டு மருத்துவர்
என்றும் இனிய மருத்துவர்
எங்கள் உடலைக் காத்திடும்
எளிய நல்ல மருத்துவர்

நோய்கள் அண்டும் போதிலே
ஏற்ற மருந்தைத் தருபவர்
நோய்கள் எதிர்க்கும் வகையிலே
உடலின் வலுவை வளர்ப்பவர்

எளிய, இனிய உணவினைச்
சுவைத்து உண்ணத் தருபவர்
நலமாய் நாளும் வாழ்ந்திட
நல்ல உணவைத் தருபவர்



நாட்டு மருந்து உணவுடன்
நன்கு இணைத்துத் தருபவர்
வாட்டும் நோய்கள் வருவதைத்
தடுத்து எம்மைக் காப்பவர்

ஏற்ற உணவைத் தருபவர்
எங்கள் நலனைக் காப்பவர்
போற்றத் தக்க அன்னையே
எங்கள் வீட்டு மருத்துவர்.

**நல்லாசிரியர் ஓ.வி. பலராமன் – ஓங்கூர், திண்டிவனம்.**

## சித்தாஞ்சலி



லூயிஜி நீண்ட கால ஆரோவிலியர். இத்தாலி தேசத்தைச் சேர்ந்த அவர் ஆரோவில்லின் வளரச்சிப் பணிகளுக்கு மிகுந்த ஒத்துழைப்புகளை நல்கியவர். மாத்ரிமந்திர் தோட்டப்பணி வளர்ச்சிக்கும், "ஆரோவில் எதிர்காலம்", யுனெஸ்கோ தொடர்பு போன்ற முக்கிய திட்டங்களில் தன்னை இணைத்துக்கொண்டு பணியாற்றி வந்தார். அவருடைய மறைவு நமக்குப் பேரிழப்பு. சகோதரர் லூயிஜியின் ஆன்மா ஸ்ரீஅரவிந்த அன்னை விண்ணக நிழலில் அமைதி பெறட்டும்.

ஓம் சாந்தி

## அறிவோம் நம் தமிழ் - III
### தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

COT
- கட்டில்
- பரியங்கல்
- மஞ்சம்
- பாண்டில்
- பாரி

COTTON
- பருத்தி
- பருத்தி நூல்
- பருத்திப்பயிர்
- தூசு
- பன்
- துய்
- தோக்குளம்
- பரி
- பிசு
- பிஞ்சை
- பாரம்

COURAGE
- தைரியம்
- நெஞ்சுரம்
- வீரம்
- துணிவு
- கடுங்கண்
- மொய்ம்பு (மனஉறுதி)
- ஓர்மம்
- நெஞ்சு

.

நன்றி; ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.



**தனிச்சுற்றுக்கு மட்டும்**

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

Unit of Sri Aurobindo International Institute of Educational Research

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.